REGD. No. TN-MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு



**பயன்**

பொருள் பாடுபடுபவருக்குப் போய்ச்சேர வேண்டும். போய்ச் சேரும் பொருளும் பயனுள்ள காரியத்திற்குச் செலவாக வேண்டும்.

பேறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**விவசாயம்**

விவசாயத்தில் ஈடுபட்ட கூலியாட்களுக்கு கூலி தவிர விவசாயத்தில் ஒரு பங்கு இருக்கும் படி செய்ய வேண்டும்.

-தந்தை பெரியார்

மலர் 5 சென்னை 31—7—1981 வெள்ளி வெளியீடு 1—8—1981 சனி இதழ் 282

ஒட்டல்களில் உல்லாசம்-சல்லாபம்

# வீடு புகுந்து திருடும் கோஷ்டி பிடிபட்டது: 5 பேர் கைது

சென்னை, ஜூலை 31—வீடுகளில் பூட்டை உடைத்து புகுந்து 7 லட்ச ரூபாய் மதிப்புள்ள பொருட்களை திருடி அப்பணத்தைக்கொண்டு உல்லாச வாழ்வு நடத்தியதாகக் கூறப்படும் கோஷ்டியை போலீசார் பிடித்துள்ளனர்.

இது பற்றிய விவரம் வருமாறு:-

சென்னை அசோக் நகரை சேர்ந்தவர் பாலசுப்பிரமணியம்,

கடந்த 8-ந்தேதிஇவரது வீடு பூட்டியிருந்தபோது யாரோபூட்டை உடைத்து வீடு புகுந்து 15 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகள், பணம் போன்றவற்றை திருடிச் சென்றுவிட்டனர். இதுகுறித்து பாலசுப்பிரமணியம் போலீசில் புகார் செய்திருந்தார்.

## கொச்சி

இதையடுத்துப் போலீசார் தீவிர விசாரணை நடத்தி கொச்சியைச் சேர்ந்த ஸ்ரீதரன் (வயது 40) என்ற ஆசாமியை கைது செய்தனர்,

ஸ்ரீதரன் கொடுத்த தகவலில் வீடு புகுந்து திருடும் கோஷ்டி ஒன்று இயங்கி வருவது தெரிந்தது.

இக்கோஷ்டியின் தலைவன் ஆங்காங்கே வெவ்வேறு பெயர்களை வைத்துக் கொண்டு திருட்டுத் தொழிலை நடத்தி வந்ததாக விசாரணையில் தெரிய வந்தது.

இந்த ஆசாமிக்கு சேகர், சின்னசேகர். குமார் சந்திரன் போன்ற பல பெயர்கள் உண்டாம்.

## ஓட்டலில் உல்லாசம்

கொள்ளையடித்த பணத்தைக் கொண்டு இந்த ஆசாமி பெரிய ஓட்டல்களில் தங்கி உல்லாச வாழ்க்கைவாழ்ந்ததாகவும் கூறப்படுகிறது.

## கார்களும் வாங்கினராம்

சென்னை,கோவை,சேலம் போன்ற பல்வேறு நகரங்களில்வீடு புகுந்துகொள்ளையடித்த இக்கோஷ்டியினர் அம்பாசிடர் கார்களை வாங்கி 'டிராவல் சர்வீஸ்' நடத்தினர்களாம்.

பல்வேறு பெயர்களில் திரிந்து வந்த சேகருக்கு சென்னை கோடம்பாக்கத்தில் உள்ள ஓர் துணை நடிகை காதலியாக இருந்து வந்தாராம்.

## போலீஸ் வலையில் சிக்கினர்

இத்தகவலை தெரிந்து கொண்ட போலீசார், துணை நடிகை சுலேகாவின் வீட்டை கண்காணித்து வந்தனர். போலீசார் நினைத்தபடியே காதலியை தேடி சேகர் வந்தபோது அவரை போலீசார் கைது செய்தனர்.

விசாரணையில் சேகர் கொடுத்த தகவலின்பேரில் போலீசார், திருட்டு பொருட்களை வாங்கியதாக கூறப்படும் விருகம்பாக்கத்தைச் சேர்ந்த குப்புசாமி, வில்லிவாக்கத்தைச் சேர்ந்த சேகர் ஆகியோரையும், திருட்டுப் பொருட்களை விற்க உதவி செய்ததாக கூறப்படும் நுங்கம்பாக்கம் லோகநாதனையும் கைது செய்தனர்.

இவர்கள் கூட்டாக சேர்ந்து ரூபாய் 7 லட்சத்திற்கும் மேற்பட்ட மதிப்புள்ள பொருட்களை கொள்ளை அடித்துள்ளதாக தெரிய வந்துள்ளது.

இதுவரை சுமார் 75 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் மீட்கப்பட்டுள்ளன.

போலீஸ் துணைக் கமிஷனர் குருவையா உதவி கமிஷனர் ஸ்ரீராமுலு, இன்ஸ்பெக்டர் கோபால கிருஷ்ணன் ஆகியோர் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## கல்வியமைச்சர் அரங்கநாயகம் நாளை தாயகம் திரும்புகிறார்

சென்னை.ஜூலை31-இங்கிலாந்து பிரான்ஸ். அமெரிக்கா ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்துள்ள கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தமது பயணத்தை முடித்துக்கொண்டு நாளை (1ந்தேதி) காலை 11.40 மணிக்கு பம்பாய் வழியே சென்னை விமானம் நிலயம் வந்து சேர்கிறார்.

## முதல்வர் தலைமையில் அமைச்சரவை கூட்டம்

சென்னை, ஜூலை 31-முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் இன்று அமைச்சரவைக் கூட்டம் தலைமைச் செயலகத்தில் நடைபெற்றது.

அமைச்சரவைக் கூட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவரோடு மற்ற அமைச்சர் பெருமக்களும் கலந்து கொண்டனர்.

தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் மற்றும் அதிகாரிகளும் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

## ஆண்டுஒன்றுக்கு 15லட்சம்ரூபாய்செலவு:

## தமிழக கோவில்களில் அரிஜனங்களுக்கு

# இலவச திருமணம்

### மதுரை, பழனி கோவில்களில் மாதம் 25 திருமணங்கள்

## அமைச்சர் ஆர். எம். வீ. அறிவிப்பு

மதுரை, ஜூலை 31- தமிழகத்தில் உள்ள 12 கோயில்களில் இருந்து ஆண்டு ஒன்றுக்கு ரூ. 15 லட்சம் எடுத்து ஏழை-எளிய ஆதிதிராவிடமக்களுக்கு திருமணம செய்துவைக்க திட்டமிடப்பட்டுள்ளதாக அமைச்சர் ஆர். எம். வீ. அறிவித்துள்ளார்.

இந்த திட்டம் அடுத்த மாதம் முதல் அமலுக்கு வரும் என்றும் அமைச்சர் ஆர். எம். வீ. கூறினர்.

மதுரையில் புத்தக வெளியீட்டு விழா ஒன்றில் அமைச்சர் ஆர். எம். வீ. பேசினர்.

அந்த விழாவில் அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது:-

நகரங்களில் இருந்து கொண்டு இருக்கும் சமயத் தலைவர்கள் கிராமங்களுக்குச் சென்று தீண்டாமைக் கொடுமைபற்றிமக்களிடம் எடுத்துக் கூறிப் பிரச்சாரம் செய்யவேண்டும்.

ஆண்டவன் படைப்பில் அனைவரும் சமம் என்பதை மக்களிடம் எடுத்துச் சொல்லவேண்டும்.

## ஆலயங்களில் ஒதுக்காதீர்

ஆலயங்களில்,ஒருபெரும் பகுதி மக்கள் ஒதுக்கப்படும் நிலை இருந்து வருகிறது.

இத்தகைய நிலையால் அவர்கள் எங்கோ அழைத்துச்செல்லப்படுகிறார்கள்.

கிராமங்களில் உள்ள ஆதிதிராவிட மக்கள் ஆலயங்கள் கேட்டால் அறநிலையத்துறை கட்டிக் கொடுக்கத்தயாராக இருக்கிறது.

மதம் மாறுவதற்கு பின்னணி என்ன என்பதை தெரிந்து கொள்வது அவசியம்.

இதை நாம் சந்திக்க வேண்டிய சூழ்நிலையில் இருக்கிறோம்.

## கோயில்கள் சார்பில் அரிஜன திருமணங்கள்

அறநிலையத்துறை சார்பில சமூகப்பணிகள் செய்யப்பட வேண்டி இருக்கிறது.

பெரிய கோயில்கள் 12ல் இருந்து ஆண்டு ஒன்றுக்கு ரூ. 15 லட்சம் எடுத்து ஏழை—எளிய ஆதிதிராவிட மக்களுக்கு திருமணம் நடத்தி வைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

ஒவ்வொரு திருமணத்திற்கும் ரூ. 70 முதல் ரூ. 1000 வரை செலவு செய்யப்படும்.

## மாதம் 25 "திருமணங்கள்"

மதுரை மீனாட்சி அம்மன் கோயில் சார்பாக 25 அரிஜன திருமணங்கள், பழனி சுப்பிரமணிய சுவாமி கோயில் சார்பாக 25 அரிஜன திருமணங்களும் மாதா மாதம் நடைபெறும்.

இந்த திட்டம் அடுத்த மாதம் முதல் அமுலுக்கு வரும்.

இதே போல கோயில்கள் மூலம் நடைபெறும் பள்ளிகளில் பயிலும் ஏழை எளிய மாணவ மாணவிகளுக்கு தீபாவளி, பொங்கல் நாளில் இலவச சீருடை வழங்கப்படும்.

இந்த திட்டமும் இந்த ஆண்டு தீபாவளி முதல் அமுலுக்கு வரும்.

## ஆலயங்கள் கிராமங்களை தத்து எடுக்கும்

ஒவ்வொரு ஆலயமும் அருகேஉள்ள கிராமத்தை தத்து எடுத்து அந்த கிராமத்திற்கு சேவைசெய்யும். இந்த திட்டமும் நடைமுறைப்படுத்தப்படும்.

திருப்பரங் குன்றம் அருகே உள்ள ஒரு கிராமத்தை முன் மாதிரியாக மதுரை மீனாட்சி அம்மன் கோவில் தத்து எடுத்துள்ளது.

## மதத்தலைவர்கள் மாநாடு

அடுத்தமாதம் அனைத்து மதத் தலைவர்களையும் அழைத்து ஒரு மாநாடு நடத்த திட்டமிடப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினர்.

## கண்ணதாசனுக்கு தீவிர சிகிக்சை அளிக்க

# சென்னை டாக்டர் அமெரிக்காவிரைகிறார்

### புரட்சித்தலைவர் அவசர ஏற்பாடு

சென்னை, ஜூலை 31-அமெரிக்க ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ள அரசவைக் கவிஞர் கண்ணதாசனுக்கு தீவிர சிகிச்சை அளிக்க முதல்வர் புரட்சித்தலைவர் பிரபல டாக்டர் கே. வி. திருவேங்கடத்தை அமெரிக்காவிற்கு தமிழக அரசின் சார்பில் அனுப்பி வைத்துள்ளார்.

தமிழகஅரசின் அரசவை கவிஞரான கவிஞர் கண்ணதாசன், கவிஞர்கள் மாநாட்டில் கலந்து கொள்வது உட்பட பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள அமெரிக்காவிற்கு சென்றிருந்தபோது சிகாகோவில் நெஞ்சுவலி காரணமாக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு உள்ளார்,

அதன் பிறகு அவர் உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டது.

நினைவு இழந்த நிலையில் இருந்த அவருக்கு ஓரளவு உணர்வு திரும்பியது.

இந்நிலையில், கண்ணதாசன் உடல்நிலை கவலைக்கிடமாக உள்ளதாக அங்குள்ள துணை தூதரக அதிகாரி ஒருவர் தெரிவித்ததாக தகவல் வந்தது.

## ஆறுமுகம் தகவல்

இதன் பிறகு சென்னையில் உள்ள கண்ணதாசன் இல்லத்திற்கு சிகாகோவில் கண்ணதாசனுக்கு சிகிச்சை அளிக்கும் டாக்டர்களில் ஒருவரான ஆறுமுகம் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு கண்ணதாசன் இன்னும் அபாய கட்டத்தைக் கடக்கவில்லை என்றபோதிலும், அவர் உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டு வருவதாகக் கூறினர்.

## புரட்சித் தலைவர் ஏற்பாடு

இதற்கிடையே கவிஞர் கண்ணதாசனுக்கு தமிழக அரசின சார்பில் விசேஷ சிகிச்சை அளிக்க முதல்வர் புரட்சித்தலைவர் தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

இதன்படி சிகாகோவில் கவிஞர் கண்ணதாசனுக்கு தீவிர சிகிச்சை அளிக்க சென்னையில்உள்ள பிரபல டாக்டரான, கே. வி. திருவேங்கடம் இன்று அமெரிக்காவிற்கு புறப்பட்டுச் செல்லுகிறார்.

3 மாதங்களுக்கு முன், கவிஞர் கண்ணதாசனுக்கு டாக்டர் திருவேங்கடம் சிகிச்சை அளித்தவராவார்.

கவிஞர் கண்ணதாசனுக்கு சிகிச்சை அளிக்கவும் அருகில் இருந்து அவரைக் கவனித்துக் கொள்ளவும் தமிழக அரசு இந்த ஏற்பாட்டைச் செய்துள்ளது.

டாக்டர் திருவேங்கடம் நாளை அமெரிக்கா போய்ச் சேருவார்.

## அமெரிக்க மந்திரி-நரசிம்மராவ் சந்திப்பு

வாஷிங்டன், ஜூலை 31. அமெரிக்க வெளிவிவகார அமைச்சர் அலெக்சாண்டர் ஹெய்க்கை, வெளிவிவகார அமைச்சர் பி. நரசிம்மராவ் சந்தித்து பேசுகிறார். ஆகஸ்டு 2-ந் தேதி இந்தச் சந்திப்பு நடக்கிறது.

## எம்.எல்.ஏ. மீது தாக்குதல்: 11 பேர் கைது

பெங்களூர், ஜூலை 31—கர்நாடக இ. காங்கிரஸ் எம். எல். ஏ. சாலப்பா தாக்கப்பட்டார். இந்தச் சம்பவத்தைத் தொடர்ந்து 11 பேர் கைது செய்யப்பட்டனர்.

அவர்களில் ஒருவர் ஜாமீனில் வந்துவிட்டார். 10 பேர் காவலில் வைக்கப் பட்டுள்ளனர்.

## அன்பழகன் பேச்சுக்கு சூடான பதில்

—2-ம் பக்கம்

# மூளை இன்றி வாழும் 'அதிசய' மனிதன்

பீகிங், ஜூலை 31—'மூளை இல்லாதவன்' என சிலர் திட்ட கேட்டு இருக்கலாம். ஆனல் உண்மையில் மூளையின்றி உயிர் வாழ முடியாது.

ஆனல் சீனவைச்சேர்ந்த ஒருவர் கடந்த 15 ஆண்டு காலமாக மூளையின் பெரும் பகுதி நீக்கப்பட்ட நிலையிலும் வாழ்ந்து வருகிறார் என்ற தகவலை சீன செய்தி நிறுவனம் அறிவித்துள்ளது.

31 வயதாகும் இந்த நபருக்கு 15ஆண்டுகளுக்கு முன் நடந்த ஓர் அறுவை சிகிச்சையில், மூளையின் பெரும் பகுதி நீக்கப்பட்டு விட்டதாம். ஆனாலும் அவர் பெரும்பாலும், மற்றவர்களைப் போலவே வாழ்ந்து வருவதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

# சார்லஸ் திருமணத்திற்குவந்ததால் பதவியை பறிகொடுத்த ஜனதிபதி

லண்டன், ஜூலை 31. காமன் வெல்த் நாடுகளில் காம்பியாவும் ஒன்றாகும்.

லண்டனில் நடந்த இளவரசர் சார்லஸ் திருமணத்திற்கு காம்பியா நாட்டு ஜனதிபதி தாவதா ஜாவரா கலந்து கொள்ள லண்டனுக்கு வந்திருந்தார்.

இவர் லண்டனில் இருந்த போது காம்பியா நாட்டில் நடந்த புரட்சி ஒன்றில ஜாவரா பதவி இழந்துவிட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

ஜனதிபதியாக லண்டனுக்கு வந்த ஜாவரா தற்போது பதவி இழக்த நிலையில் இங்கிலாந்து நாட்டில் தங்கி உள்ளதாக கூறப்படுகிறது.

காம்பியா நாட்டில் ஏற்பட்டுள்ள ஆட்சி மாற்றம் குறித்த முழுத் தகவல் கிடைக்கவில்லை எனக் கூறப்படுகிறது.

# ஆந்திரா, கர்நாடகத்தில் இடைத் தேர்தல் நடத்த மத்திய அரசு ஆலோசனை

புதுடெல்லி ஜூலை 31—கர்நாடக மாநில எதிர்க்கட்சிகளிடையே பெருகிவரும் ஒற்றுமையின்மையை நல்ல முறையில் பயன்படுத்திக்கொண்டு தேவராஜ் அர்சின் செல்வாக்குக்கு முற்றுப்புள்ளி வைக்க கர்நாடக மாநிலத்தில் இடைத்தேர்தல் நடத்துவது பற்றி தேர்தல் கமிஷனுடன் மத்திய அரசு ஆலோசனை நடத்தி வருகிறது. அதே நேரத்தில் ஆந்திர மாநிலத்திலும் இடைத்தேர்தல் நடத்த மத்திய அரசு யோசித்து வருகிறது.

கர்நாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் அடுத்த பொதுத் தேர்தல்கள் வரும் 1982-ம் ஆண்டு பிப்ரவரி மாத வாக்கில் தான் நடைபெற வேண்டும். தற்போதைய ஆட்சி காலம் 83ம் ஆண்டு துவக்கத்தில் முடிவடைகிறது.

ஆனால் கர்நாடக அரசின் தற்போதைய சூழ்நிலையில் அதுவரை பொதுத் தேர்தலை நீடிக்க விடுவது சாத்தியமில்லை என்றே டெல்லி வட்டாரங்கள் கூறுகின்றன.

1982-ம் ஆண்டு துவக்கத்தில் பொதுத்தேர்தல் நடக்குமேயானால் அதற்குள் எதிர்க்கட்சிகள் ஒன்று பட்டு முன்னாள் முதல் அமைச்சர் தேவராஜ் அர்சின் கை ஓங்கிவிடலாம் என்றும் அதனால் ஆளும் கட்சிக்கு (இந்திரா காங்கிரஸ்) பாதகம் தான் ஏற்படும் என்றும் கர்நாடக மாநில இந்திரா காங்கிரஸ் கருதுகிறது. தேவராஜ் அர்சின் செல்வாக்கு கொஞ்சம் கொஞ்சம் ஆக சீர்குலைந்து வரும் தற்போதைய நிலையில் கர்நாடக மாநிலத்தில் விரைவில் இடைத்தேர்தல் கொண்டு வருவது ஒரு பக்கம் அர்சின்கை ஓங்கிவிடாமல் இருக்கவும் அதேநேரத்தில் ஆளும் கட்சியான இந்திரா காங்கிரசுக்கு தொடர்ந்து பதவியில் இருக்க வழி ஏற்படும் என்றும் இந்திராகாங்கிரஸ் கருதுகிறது.

இந்த சூழ்நிலையில் கர்நாடகத்திலும், அதே நேரத்தில் ஆந்திர மாநிலத்திலும் இந்த ஆண்டு முடிவுக்குள் இடைத் தேர்தல் நடத்துவது பற்றி மத்திய அரசு தேர்தல் கமிஷனுடன ஆலோசனை நடத்தி வருகிறது.

இழந்த செல்வாக்கை திரும்பப் பெறுவதில் தேவராஜ் அர்ஸ் இன்னும் ஆரம்பக் கட்டத்திலே இருக்கிறார். இந்தநிலைமையில் அவருக்கு மேலும் அவகாசம் கொடுத்து காலத்தை நீடிக்காமல இடைத் தேர்தலை நடத்தி விடலாம் என்று இந்திரா காங்கிரஸ் திட்டமிட்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

குண்டுராவ் மந்திரி சபையில் கட்சித் தாவல் இன்னும் பயமுறுத்திக் கொண்டே இருக்கிறது. அர்ஸ் மந்திரிசபை வீழ்ச்சி அடைந்ததைத் தொடர்ந்து 85 எம். எல். ஏக்கள் இந்திரா காங்கிரசில் அப்போது சேர்ந்தனர். அப்படி சேர்ந்தவர்கள் சிலர் குண்டுராவ் ஆட்சியில் சில பதவிகளையும் பெற்றார்கள். ஆனால் இந்த நிலை நீடிக்கும் என்று எதிர்ப்பார்ப்பதிற்கில்லை. குண்டுராவின் ஆட்கள் மீண்டும் அர்ஸ் காங்கிரசில் சேர்ந்தால் நிலைமை என்னவது என்று அவர்கள் யோசிக்க முற்பட்டுள்ளனர்.

இந்தநிலைமாறுவதற்குள் இடைத்தேர்தல நடந்தால் கட்சித் தாவலுக்கும் ஒரு முடிவு ஏற்படும்.

மத்திய அரசு கர்நாடக மாநிலத்தில் இடைத் தேர்தல் நடத்தமுற்படுவதற்கு இதுவும் ஒரு காரணம் என்று கூறப்படுகிறது.

கர்நாடகத்தில் இடைத் தேர்தல் நடக்கும் போது ஆந்திர மாநிலத்திலும் இடைத்தேர்தலை நடத்தி விடலாம் என்றும் மத்திய அரசு யோசனை செய்து வருகிறது.

அரியானா, இமாசல பிரதேசம், மேற்குவங்காளம் ஆகிய மாநிலங்களில் அடுத்த பொதுத தேர்தல் வரும் 1982-ம் ஆண்டு பிப்ரவரி மாத வாக்கில் நடைபெற வேண்டும். ஆனால் அதற்குள்ளாகவே கர்நாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலங்களுடன் சேர்த்து இந்த 5 மாநிலங்களிலும முன்னதாகவே தேர்தலை நடத்த மத்திய அரசு ஆலோசனை செய்து வருகிறது.

## வயலில் கிடைத்த கோவில் சிலைகள்

தஞ்சை, ஜூலை 31—தஞ்சை மாவட்டம் சிலாத்தூரில் வயல் ஒன்றை உழுதபோது பஞ்சலோக சிலைகள் 5 கிடைத்தன.

பழங்காலத்தை சேர்ந்த இந்த சிலைகள் விலைமதிப்பு மிக்கவை எனக் கூறப்படுகிறது.

சிலைகள் ஒரத்தநாடு தாசில்தார் வசம் ஒப்படைக்கப்பட்டுள்ளன.

## தில்லை வில்லாளன் முகவரி

தில்லை வில்லாளன்
(முன்னாள் எம். பி.)
எண்: 45, நடுத்தெரு
மயிலாப்பூர்
சென்னை-4
தொலைபோசி: 74082

அண்ணா
பொதுத் தொழிலாளர்

## சங்க கட்டிட திறப்பு விழா

சென்னை, ஜூலை 31—திருவள்ளுவர் போக்குவரத்துக் கழக அண்ணா பொதுத் தொழிலாளர் சங்க அலுவலக கட்டிடத் திறப்புவிழாவும்அமைச்சர்களுக்கு பாராட்டுவிழாவும் ஆகஸ்ட் முதல் தேதி மாலை நடைபெறுகிறது.

இந்த விழாவில் அமைச்சர்கள் ராகவானந்தம், பொன்னையன், முத்துசாமி ஆகியோருக்கு பாராட்டு அளிக்கப்படும் என்று இந்த சங்கத் தலைவர் எஸ். பி. சிவபெருமாள் தெரிவித்துள்ளார்.

முதல் தேதி மாலை 4 மணி அளவில் அண்ணா சிலையில் இருந்து யானை, குதிரை, கரக ஆட்டம், மேள வாத்தியங்களுடன் அமைச்சர்கள் ஊர்வலமாக திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகம் வரை அழைத்து வரப்படுவார்கள்.

எரிசாராய பிரச்னை:

## கேரள விசாரணை கமிஷன் முன்பு சாட்சிகள் விசாரணை

திருவனந்தபுரம், ஜூலை 31—எரிசாராய பிரச்னை பற்றி விசாரணை செய்ய நீதிபதி சதாசிவன் தலைமையில் கமிஷன் ஒன்றை கேரள அரசு நியமித்திருப்பது தெரிந்ததே.

மன்னன் சர்க்கரை ஆலை பொது மேலாளர் என்.சி வாரியார், இந்த பேரம் சம்பந்தமாக கைது செய்யபட்டுள்ள அகமத்கான் ஆகியோருக்கு சம்மன் அனுப்ப விசாரணைக்கமிஷன் முடிவு செய்துள்ளது.

ஆகஸ்ட் மாதம 10ம் தேதி இவர்கள் இருவரும் கமிஷன் முன்பு சாட்சியம் சொல்ல அழைப்பு அனுப்பபடவிருக்கிறது.

இந்த பேரம் சம்பந்தப்பட்ட அனைவரும்இதுபற்றி கேரள அரசு தாக்கல் செய்திருக்கும் தஸ்தாவேஜுகளை பார்வையிடலாம் என்றும் கமிஷன் தெரிவித்திருக்கிறது.

## மதுரை விமான நிலையத்தில் புதிய வசதி

மதுரை, ஜூலை 31—மதுரை விமான நிலையத்தில் நாளை (1-ந் தேதி) முதல் விமானங்களுக்கு பெட்ரோல் நிரம்பும் வசதி, மதுரை வழியாக செல்லும் விமானங்களுக்கு கிடைக்கும்.

இதன் மூலம் மதுரை வரும் விமானங்கள் அதிக அளவு பயணிகளை ஏற்றி வர இயலும்.

இத்தகவலை மதுரை விமான நிலைய மானேஜர் சோமயாஜுலு தெரிவித்துள்ளார்.

# சொந்தக் கதைதான்; வேறொன்றும் அல்ல!

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பது போல எல்லோரும் சொந்தக்காரன் தான். வீட்டுத்திண்ணையிலே ஒரு பண்டாரம் படுத்திருக்கிறான். திண்ணையில் படுத்திருக்கிற பண்டாரம் கூட நமக்குச் சொந்தக்காரன் தான், தவறில்லை. அவனும் மனிதன் தான், நாம் மதிக்கக் கடமைப்பட்டிருக்கின்றோம். மதிப்பது தப்பில்லை. திண்ணையில் இருக்கிற பண்டாரத்தைப் பார்த்து வீட்டிலே இருக்கிற அம்மா, உனக்குக் குடிப்பதற்குத் தண்ணீர் வேண்டுமா என்று கேட்டார். அவனும் வேண்டும் என்றான். தண்ணீர் கொடுத்தார் அம்மையார். பிறகு அந்த அம்மையார் உள்ளே போய் சமையற் கட்டில் வேலை பார்க்க ஆரம்பித்தார். அவன் உள்ளே வந்து கூடத்திலே உட்கார்ந்தான். சமையலானவுடன் அவனே இலையை எடுத்து வந்து போட்டுக் கொண்டு 'தண்ணீர் கொடுத்தீர்களே அம்மா; சோறு போடுங்க' என்றான். சோறும் போட்டார்கள். சாப்பிட்டான் சாப்பிட்டுவிட்டு "இங்கேயே படுத்துக்கலாமா" என்றுகூட கேட்டான்.

—அன்பழகன்

*

வேறொன்றும் வித்தியாசமாக எடுத்துக் கொள்ளாதீர்கள்.

தமக்கு புதுக்குடித்தனம் 'செட்' ஆன விபரத்தைத்தான் அன்பழகன் வெளியிடுகிறார்.

## இன்னொரு வகையும் இருக்கிறது!

பண்டாரம் என்றால் இரண்டு அர்த்தம். பரதேசிக்கும் பண்டாரம் என்று பெயர். நிறைய சொத்து வைத்திருப்பவனுக்கும் பெயர் பண்டாரம்

—அன்பழகன்

இன்னொரு பண்டாரமும் உண்டு! கோவில்களில் மணியடித்து பூஜை செய்கிறவர்கள் அவர்கள்.

அதாவது அரசியலில் கருணாநிதிக்கு நீங்கள் செய்கிற வேலைகளை. ஆலயத்தில் சாமி சிலைகளுக்கு அவர்கள் செய்கிறார்கள்.

8 லட்சம் ஊழியர்களுக்கு

# சம்பள உயர்வு தந்த புரட்சித்தலைவர் ஆட்சி: அரசு ஊழியர்கள் நன்றி

சென்னை, ஜூலை 31- எட்டு லட்சம் அரசு ஊழியர்களுக்கு அகவிலைப்படி உயர்வும், இறந்தவர்களது வாரிசுகளுக்கு வேலை தருவதில் புதிய சலுகைகளையும் அளித்ததற்கு பல்வேறு அரசு ஊழியர் சங்கங்கள் நன்றியும், பாராட்டும் தெரிவித்துள்ளன.

வாரி வாரி வழங்கும் வள்ளல் ஆட்சி கேட்காமலேயே வழங்கியுள்ளது என்று அவர்கள் பாராட்டியுள்ளனர்.

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் இணைப்பு இயக்கத்தின் புதுக்கோட்டை மாவட்ட செயலாளர் சி. முத்து வெளியிட்டுள்ள அறிக்கையில் அகவிலைப்படி உயர்வுதந்த புரட்சித் தலைவருக்கு நன்றி தெரிவித்துள்ளார்.

### தாய்ப் போல முதல்வர்

பால் நினைந்தூட்டும் தாய்க்கு ஒப்பாக ஆசிரியர்கட்கு இடர்ப்பாடுகள் நேரும் பொழுது எல்லாம் கேட்காமலேயே சலுகைகளைவாரிவழங்கும் தாயாக புரட்சித்தலைவர் இருக்கிறார்.

இதனை உறுதிப்படுத்தும் வகையில் மேலும் ஒரு அகவிலைப்படியை அரசு ஊழியர்கட்கு வழங்கியதற்காக புரட்சித் தலைவருக்கு முத்து நன்றி தெரிவித்துள்ளார்.

முகவை மாவட்ட செயலாளர் இருதயராசன், தஞ்சை மாவட்ட செயலாளர் சிவானந்தம் ஆகியோரும் நன்றி தெரிவித்துள்ளனர்.

### ஊரக வளர்ச்சி பணியாளர்கள்

தமிழ்நாடு, மாவட்ட ஊரக வளர்ச்சித் திட்ட அலுவலக பணியாளர் சங்க மாநிலத் தலைவர் சண்முக சுந்தரம் வெளியிட்டுள்ள அறிக்கையில் மத்திய அரசு ஊழியர்களுக்கு இணையாக அகவிலைப்படி, வழங்கியதற்கு நன்றி தெரிவித்துள்ளனர்.

### தாழ்த்தப் பட்டோர் சங்கம்

தாழ்த்தப்பட்டோர் —மலைவாழ் அலுவலர் நல மாநிலசங்கத்தின் பொதுச் செயலாளர் இந்திரன் அந்த சங்கத்தின் சார்பில் தமிழக அரசுக்கு நன்றி தெரிவித்துள்ளார்.

### மஸ்தூர்கள் சங்கம்

அரசு ஊழியர்களுக்கு பல்வேறு சலுகைகளை அளித்துள்ள கழக அரசுக்கு மலேரியாஒழிப்பு மஸ்தூர்கள் நலசங்கம் நன்றி தெரிவித்துள்ளது.

இந்தச் சங்கத்தின் மாநிலப் பொதுச் செயலாளர் பி.பி. செல்வம் வெளியிட்டுள்ள அறிக்கையில் கழக அரசுக்கு நன்றி தெரிவித்துள்ளனர்.

17 மாவட்ட மலேரியா அலுவலர் பதவிகளை ஏற்படுத்தி ஆணை பிறப்பித்துள்ளதற்கு பொது சுகாதாரத்துறை பூச்சியியல் வல்லுநர் சங்க செயற்குழு நன்றி தெரிவித்துள்ளது, கெஜபதி தலைமையில் கூடிய செயற் குழுவில் பூச்சியியல் வல்லுநர்கட்கு பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பு தந்த தமிழக அரசிற்கு நன்றி தெரிவித்துள்ளது.

வறட்சி நிலை இருந்தும் கூட அரசு ஊழியர்களது குறிப்பறிந்து அகவிலைப்படியை கொடுத்த புரட்சித்தலைவருக்கு சங்கத்தின் சார்பில் மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவிப்பதாக குடிநீர் வடிகால் வாரிய ஊர்தி ஓட்டுநர்கள் சங்கம் தெரிவித்துள்ளது.

இந்த சங்கத்தின்தலைவர் கு.குப்புசாமி வெளியிட்டுள்ள அறிக்கையில் நன்றி தெரிவித்துள்ளார்.

பயபக்தியுடன்

## திருப்பதியில் சாமி கும்பிட்ட தி. மு. க. முதல்வர்

திருப்பதி, ஜூலை 31- புதுவை மாநில தி.மு.க. கூட்டணி அரசின் முதலமைச்சரான டி. ராமச்சந்திரன் தனது குடும்பத்துடன் திருப்பதி கோவிலுக்கு வந்து பயபக்தியுடன் சாமி கும்பிட்டார்.

கோவில் துணை நிர்வாக அதிகாரியான வெங்கடேஸ்வரலு முதலமைச்சரை வரவேற்றார்.

## கழகபேச்சாளர் முகவரி மாற்றம்

ஏவி.எம். நெடுஞ்சேரலாதன்
பா—பெ. சி. நடராஜன்
எண், 2—18 கங்கையம்மன்
கோயில் தெரு
விருபாட்சிபுரம்
வேலூர் 2
வடஆற்காடுமாவட்டம்

பெண்களிடம் வாலாட்டியவர்கள்

## ஒரே நாளில் 57 பேர் கைதானார்கள்

சென்னை, ஜூலை 31—வடசென்னைப் பகுதியில் ஒரே நாளில் 57 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

கல்லூரி மாணவிகள், குடும்பப்பெண்கள்ரோடில் செல்லும் போது இவர்கள் கலாட்டா செய்தனர் என்று கூறப்படுகிறது.

இதற்காக 57 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

போதை மாத்திரை

## தகவல் தந்தவருக்கு பரிசு

சென்னை: ஜூலை 31—பூக்கடை கோவிந்தப்ப நாய்க்கன் தெரு பகுதியில் போதை மாத்திரை விற்கப்படுவதாக ஒருவர் போலீசாருக்கு தகவல் தந்தார்.

அவர் கொடுத்த தகவல் பேரில் 600—700 போதை மாத்திரைகளை போலீசார் கைப்பற்றினார்கள்.

தகவல் கொடுத்தவர் பெயர் திருவேங்கடம். ஒரு ஆட்டோ ரிக்ஷா டிரைவர்.

இவரது பணியினைப் பாராட்டி போலீஸ் கமிஷனர் ரூ. 50 ஐ பரிசாக வழங்கினார்.

## சிறுமிகளை கற்பழித்து கொன்றவர் சுட்டுக் கொலை

பாகரைன், ஜூலை 31—அரபு நாட்டில் இரண்டு சிறுமிகளை கற்பழித்துக் கொன்ற இந்திய வாலிபருக்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது.

10 ஆயிரம் மக்கள்முன்னிலையில் அவர் சுட்டுக் கொல்லப்பட்டார்.

அரபு நாட்டிலுள்ள எமிரேட் என்ற இடத்தில் ரொட்டிக் கடை ஒன்றில் வேலை பார்த்து வந்தவர் அஜீஸ் முகமது பார்க்கர். (வயது 32) இவருடைய சொந்த ஊர் பம்பாய். இவருக்கு திருமணமாகி 4வயதில் மகள் இருக்கிறாள்.

இவர் சம்பவத்தன்று ரொட்டி வாங்குவதற்காக வந்த லைலா என்ற 7 வயது சிறுமி ஒருத்தியை ஏமாற்றி கடைக்கு உள்ளே அழைத்துச் சென்று கற்பழித்தார். பிறகு இந்த விஷயம் வெளியே தெரியாமல் இருப்பதற்காக அந்த சிறுமியை கொலை செய்து ஒரு குப்பைத் தொட்டியில் எறிந்து விட்டார். இதே போல் சைகா என்ற 4 வயது சிறுமியையும் கற்பழித்துக் கொலை செய்துவிட்டு பிணத்தைக் கடலில் எறிந்து விட்டார்.

இந்த இரண்டு கொலை சம்பந்தமாக பார்க்கரை போலீசார்கைது செய்தனர் வழக்கு நடந்து நீதிபதிகள் அவருக்கு மரணதண்டனை விதித்தனர். அவரை பொது இடத்தில் நிறுத்தி 130 முறை சவுக்கால் அடித்துபிறகுதலையைதுண்டித்துக்கொல்லும்படி நீதிபதிகள் உத்தரவிட்டார்கள்.

இந்த தண்டனை நேற்று நிறை வேற்றப்பட்டது. பார்க்கருக்கு 130 முறை சவுக்கடி கொடுக்கப்பட்டது. பிறகு அவர் 10 ஆயிரம் மக்கள் முன்பு பொது இடத்தில் துப்பாக்கியால் சுட்டுக்கொல்லப்பட்டார். இந்த தண்டனை நிறைவேற்றுவதற்கு முன்பு போலீசார் தெருத்தெருவாக சென்று சிறுமியைக் கற்பழித்த வாலிபர் பார்க்கர்சுட்டுக்கொல்லப்பட போகிறார். எல்லோரும் வருக என்று ஒலி பெருக்கி மூலம் தெரிவித்தனர்.

சுட்டுக் கொல்லப்பட்ட பார்க்கரின் 3 வயது மகளை தான் தத்துஎடுத்து வளர்க்கப் போவதாக கற்பழித்துக் கொலை செய்யப்பட்ட லைலாவின் தந்தை தெரிவித்துள்ளார்.

ஒன்றரை லட்சம் சிறு தொழில்கள் வளர

# நெரிசல் நேர மின் தடை ரத்து: முதல்வருக்கு நன்றி

சென்னை ஜூலை 31— சிறுதொழில்களுக்கு இருந்து வந்த நெரிசல் நேர மின் தடையை ரத்து செய்துள்ளதற்காக தமிழக முதல்வருக்கும், மின்சாரத்துறை அமைச்சருக்கும் சிறுதொழில் சங்கத்தினர் நன்றி தெரிவித்துள்ளனர்.

ஒன்றரை லட்சம் சிறு தொழில்கள் முன்னேற்றத்திற்குப் பயன் தரும் என்று பாராட்டியுள்ளனர்.

காலை 6 மணி முதல் 9 மணி வரையும் மாலை 6 மணி முதல் இரவு 9 மணி வரையும் உள்ள நெரிசல் நேரத்தில் மின்சாரக்கட்டுபாடு இருந்து வருகிறது.

இந்தக் கட்டுப்பாடு ஆகஸ்ட் முதல் தேதி முதல் நீக்கப்படுகிறது. இதற்கான ஆணையை அரசு பிறப்பித்துள்ளது.

இந்த கட்டுப்பாடு நீக்கத்தால் ஒன்றரை லட்சம் சிறு தொழில்கள் முன்னேற்றத்திற்குப்பயன் கிடைக்கும் என்று அந்த சங்கத்தினர் தெரிவித்துள்ளனர். தடையை நீக்க வேண்டும் என்ற நெடுநாளையக் கோரிக்கையை நிறைவேற்றித்தந்ததமிழக முதல்வருக்கும், மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுக்கும், ஊரகத்துறை அமைச்சர் கே.ஏ.கே. விற்கும் சிறு தொழில் சங்கத்தினர் நன்றி தெரிவித்துள்ளனர்.

தமிழ்நாடு சிறுதொழில் சங்க வெள்ளி விழா ஆண்டினை ஒட்டி அளிக்கப்பட்ட பரிசாக இந்த சலுகையைக் கருதுவதாக சங்கத்தினர் அறிவித்துள்ளனர்.

## சென்னையில் கம்பர் நினைவாக அரங்கு

சென்னை, ஜூலை 31—சென்னையில் கம்பர் நினைவாக கம்பர் கழகம் சார்பாக ஓர் மண்டபம் கட்ட ஆலோசிக்கப்பட்டு வருவதாக, கம்பர் கழகத் தலைவரும், சென்னை உயர் நீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதியுமான இஸ்மாயில் தெரிவித்துள்ளார்.

நெய்வேலியில்

## மின்சார உற்பத்தி பெருக்க திட்டம்

மதுரை, ஜூலை 31—நெய்வேலியில் மின்சார உற்பத்தியை அதிகரிக்க 210 மெகாவாட் சக்தி கொண்ட 3 பிரிவுகள் அமைக்கப்படும்.

இரண்டாவது சுரங்க திட்டத்தில் இந்தப் பிரிவு துவக்கப்படும் என்று நெய்வேலி பழுப்பு நிலக்கரி திட்ட சேர்மன் தாண்டன் கூறினார். ஆண்டுக்கு ஒரு லட்சம் டன் பழுப்பு நிலக்கரி தயாரிக்க திட்டமிடப்பட்டுள்ளதாகவும் அவர் தெரிவித்தார்.

★ நிலத்தின் தரத்திற்கு ஏற்றாற்போல கடன் வசதி
★ விவசாயிகளுக்கு மின் கட்டண சீரமைப்பு
★ விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி உயர்வு

## தமிழக விவசாயிகளுக்கு

# மேலும் சலுகைகள்

## வேளாண்மை உயர்மட்டக்குழு சிபாரிசுகள்

சென்னை, ஜூலை 31- தமிழக விவசாயிகளுக்கு மேலும் பல சலுகைகளை புரட்சித்தலைவர் அரசு செய்ய இருக்கிறது. இதன் விவரங்களை வேளாண்மை உயர்மட்டக் குழுத் தலைவர் முனுஆதி அறிவித்துள்ளார்.

நிலத்தின் தரத்திற்கு ஏற்ற வகையில் கடன் வசதி, மின்கட்டணத்தில் சீரமைப்பு, விவசாய தொழிலாளர்களுக்கு கூலி உயர்வு போன்றவை குறித்து சிபாரிசு செய்துள்ளது.

வேளாண்மை உயர் மட்டக்குழுத்தலைவர் முனு ஆதி நிருபர்களிடம் கூறியதாவது:-

விவசாய பணிகளுக்காக விவசாயிகளுக்கு கடன் தரப்படுகிறது. இதில் இந்த வகைக்கடன் பெறுபவர்களை ஐந்து ஏக்கருக்கு உட்பட்ட நில உடமையாளர்கள் சிறு விவசாயிகள், அதற்கு மேல் உள்ளவர்கள் பெரு விவசாயிகள் என்றும் இப்போது தரம் பிரிக்கப்பட்டுள்ளது.

இப்படி 5 ஏக்கர் 10 ஏக்கர் என்று பிரித்து இருப்பதில்சங்கடம்இருக்கிறது. மாவட்டத்திற்கு மாவட்டம் நிலத்தில் தரம் மாறுபட்டு இருக்கிறது.

### பாசன நிலம், பம்ப்செட் நிலம், மானாவாரி நிலம்

முழுக்க முழுக்க ஆற்றுப் பாசனத்தைப் பெற்றுள்ள தஞ்சை போன்ற மாவட்டங்களில் ஐந்து ஏக்கர் நில உடமை என்பது ஒரு விதமாகவும், பம்ப் செட் விவசாயத்தை நம்பியுள்ள வட ஆற்காடு மாவட்டத்தில் 5 ஏக்கரினை ஒரு விதமாகவும், சேலம் கோவை போன்ற இதர மாவட்டங்களில் நிலைமை வேறு விதமாகவும் உள்ளது.

இதையெல்லாம் கருத்தில் கொள்ள வேண்டி இருக்கிறது. நிலத்திற்கு நீர்வளம், மண்வளம் ஆகியவைமாவட்டத்திற்கு மாவட்டம் வேறுபட்டு இருக்கிறது.

இவைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு கடன் பெறுவதற்கு தகுதி, வசதிகளை மாற்றி அமைக்க வேண்டும் என உயர் மட்டக்குழு கருதுகிறது.

### 3 வகை பிரிவுகள்

ஆற்றுப்பாசன வசதி, கிணற்றுப்பாசன வசதி, வானம் பார்த்த பூமி என்று 3பகுதிகளாக தரம் பிரித்து நீர், நில வள அடிப்படையில் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

எத்தனை ஏக்கர் நிலம் வைத்து இருந்தால் விவசாயிகளுக்கு கட்டுப்படியாகும் என்பதை கணக்கில் எடுத்துக்கொண்டு கடன்பெறும் தகுதியை நிர்ணயிக்கலாம் என்று உயர்மட்டக்குழு யோசனை கூறியுள்ளது.

### அளவுகோல் இது தான்

இந்த முறையையே அளவு கோலாக வைத்துக் கொண்டு விவசாயிகளுக்கு சலுகைகளை வழங்கலாம் என்று கருதுகிறோம்

இதுகுறித்து உயர்மட்ட குழு அரசுக்கு சிபாரிசு செய்யும். இதன் மூலம் பயிர்க்கடன் பெறுவதற்காக நிலச் சொந்தக்காரர்களுக்கு தர நிர்ணயம் செய்ய யோசனை உள்ளது.

### மின் கட்டணம் சீரமைப்பு

இதுபோல விவசாயிகளது மின்சாரக்கட்டணத்தை சீரமைக்கவும் உயர்மட்டக்குழு கருதி உள்ளது.

இப்போது சிறு விவசாயிகட்கு யூனிட் ஒன்றுக்கு 12 காசாகவும், பெரிய விவசாயிகட்கு 14 காசாகவும் நிர்ணயிக்கப்பட்டு இருக்கிறது.

சிறு விவசாயிகளுக்கு இந்த அரசு மின்சாரக் கட்டணத்தை 12 காசு என்று குறைத்துள்ளது.

அப்படி இருந்த போதிலும் மீட்டர் வாடகை, பராமரிப்பு, சர்சார்ஜ், அபராத கட்டணம் போன்றவற்றையும் கணக்கிட்டால் மாதத்திற்கு 50 யூனிட் மின்சாரத்தை பயன்படுத்தும் ஒரு சிறு விவசாயி யூனிட்டுக்கு ஏறத்தாழ 26 காசு கட்ட வேண்டி இருக்கிறது.

அதே நேரத்தில் பெரிய விவசாயிகளுக்கு யூனிட்டுக்கு இவைகளை எல்லாம் சேர்த்தாலும் 15 காசு தான் ஆகிறது.

### நிலப்பிரபுக்கள் இதிலும் நன்மை பெறுகிறார்கள்

ஆகவே இப்படிப்பட்ட வேறுபாடுகள் போக்கப்பட மின்சாரக்கட்டணத்தை சீரமைப்புச் செய்ய உயர் மட்டக்குழு உத்தேசித்துள்ளது.

இது குறித்து பரிசீலித்து அரசுக்கு இந்தக்குழு சிபாரிசு செய்தால் விவசாயிகள் பயன்படுத்தும் மின்சாரத்துக்கான கட்டணத்தை செலுத்துவதில் விவசாயிகட்கு சில சங்கடங்கள் இருக்கின்றன.

மின்சாரக் கட்டணத்தைக் கட்டுவதற்காக மின்சார வாரிய அலுவலகத்தில் பல மணி நேரம் கியூவில் காத்திருக்க வேண்டி இருக்கிறது.

### வயலிலேயே கட்டண வசூல்

இந்தசங்கடத்தைபோக்கவும் கருதியுள்ளோம். மின்சாரம் பற்றி மீட்டரில் ரீடிங் எடுக்கும் போது விவசாயிகட்கு அட்டை வழங்கி அதல் அவர்கள் பயன்படுத்திய மின்சார அளவு எழுதப்படும்.

அதற்கு உண்டான கட்டணத்தை அங்கேயே அப்போதே வசூல் செய்து கேட்டு அட்டையில் பதிவு செய்யப்படும். பின்னர் முறையான ரசீது அனுப்புவது என்ற ஏற்பாட்டை அமுலுக்குக் கொண்டு வர உச்சமட்டக்குழு சிபாரிசு செய்துள்ளது.

### கூலி உயர்வு

விவசாயத்தொழிலாளர்கட்கு கூலி நிர்ணயம் செய்யப்பட்டு இருக்கிறது.

இந்தக் கூலி விகிதம் நிர்ணயிக்கப்பட்ட பிறகு விலைவாசி உயர்ந்து இருக்கிறது. ஆகவே கூலி உயர்வு கோரிக்கையை எழுப்பி இருக்கிறார்கள்.

விவசாயத்தொழிலாளர்களுக்கு கட்டுப்படியாகக் கூடிய வகையிலும், உணவு தானியங்கள் உற்பத்தி செய்யும்விவசாயிகளுக்கு கட்டுப்படியாகக் கூடிய நியாய விலையிலும் கிடைக்க வேண்டும்.

இதை மனதில் கொண்டு விவசாயத் தொழிலாளர்கட்கு கூலி உயர்வு அளிப்பது குறித்தும் அரசுக்கு உயர் மட்டக்குழு சிபாரிசு செய்யும்.

இவ்வாறு முனு ஆதி கூறினார்.

---

## முதல்வர் புரட்சித் தலைவருக்கு அரசு ஊழியர்கள் பாராட்டு

சென்னை, ஜூலை 31— முதல்வர் புரட்சித் தலைவருக்கு தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுநர் கழகம் (சி அண்டு டி பிரிவு) பாராட்டி நன்றி தெரிவித்துள்ளது.

அகவிலைப்படி 9வது தவணையை ஜூன் முதல் தந்ததற்கும் இறந்தவர்களது வாரிசுகளுக்குவேலை அளிப்பதில் புதிய சலுகை அளித்து இருப்பதற்கும் பாராட்டும் நன்றியும் தெரிவித்துக்கொள்கிறோம் என்று சங்கப் பொதுச் செயலாளர் கே. சீனிவாசன் ஒரு அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

---

**பேச்சாளர் முகவரி**
புலவர் சிற்றரசு
தந்தை பெரியார்வீதி
மேட்டுப்பாளையம்
கோவை மாவட்டம்
-641301

---

மூர்மார்க்கெட் இட மாற்றம்

## ரூ. 10 கோடியில் பல அடுக்குமாடி கடைகள் அமைப்பு

அமைச்சர் குழந்தைவேலு தகவல்

சென்னை, ஜூலை 31—மூர்மார்க்கெட் இடம் மாற்றப்படுகிறது. ரூ. 10 கோடி செலவில் புதிய அடுக்குமாடி கடைகள் கட்டும் வேலைகள் விரைவில் தொடங்கும் என்று அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.

சென்னை கண்ணப்பர் திடலில் புதிதாக கட்டப்பட்ட கடைகளைத் திறந்து வைத்து அமைச்சர் குழந்தைவேலு பேசினார்.

அவர் கூறியதாவது:-

தற்போது மூர்மார்க்கெட் இருக்கும் இடம் விரைவில் ரயில்வே இலாகாவிடம்ஒப்படைக்கப்படும். எனவே மூர்மார்க்கெட் வியாபாரிகளுக்கு ரூ 10 கோடியில் புதிய கடைகள் கட்டப்படும். நேரு அரங்கத்தின் அருகில் உள்ள தடாகம் அல்லிக்குளம் தூர்க்கப்பட்டு அதில் பல அடுக்குமாடி கட்டப்படும்.

அதில் 1000 கடைகள் அமைக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

மூர்மார்க்கெட்டின் பின்பகுதியில் வியாபாரம் செய்து வந்தவர்களுக்காக கண்ணப்பர்திடலில் இந்த புதிய கட்டிடங்கள் கட்டப்படும்.

ரயில்வே பொது மேலாளர் வர்கீஸ்அன்வர் பேசுகையில் "மூர்மார்க்கெட்டின் பின்னால் வர்த்தகம் செய்பவர்கள் 2 வாரத்துக்குள் மூர்மார்க்கெட்டின் பின்பகுதி கடைகளை காலி செய்து தந்தால், அந்த இடத்தில் அக்டோபர் மாதத்திற்குள் 2 ரயில்வே பிளாட்பாரங்களைக் கட்டிவிட முடியும் என்றார்.

### ஜேப்பியார்

கடைகளை குறுகிய காலத்துக்குள் கட்டி முடித்த ரயில்வே நிர்வாகத்தை ஜேப்பியார் எம். எல். சி. பாராட்டினார்.

---

பேருந்து விபத்து

## புலவர் அறிவுடைநம்பி உயிர் தப்பினார்

சென்னை, ஜூலை 31. விரைவுப் பேருந்தில் பயணம் செய்த புலவர் அறிவுடைநம்பி மயிரிழையில் உயிர் தப்பினார்.

சென்னையில் இருந்து புறப்பட்ட விரைவுப் பேருந்து கடந்த 27-ம் தேதி இரவு உளுந்தூர்பேட்டை அருகே ஒரு லாரி மோதி விபத்துக்குள்ளாகியது.

அதில் பயணம் செய்த புலவர் அறிவுடைநம்பி மயிர் இழையில் உயிர் தப்பினார்.

ஊமைக் காயங்களோடு உயிர்தப்பிய அறிவுடைநம்பி நிகழ்ச்சிகளை ஆகஸ்ட் 13க்கு மேல் ஒத்தி வைத்துள்ளதாக அறிவித்துள்ளார்.

---

கிராமப்புற வளர்ச்சித் திட்டம்

## தஞ்சையில் ரூ. 54 லட்சம் செலவில் திட்டங்கள்

தஞ்சை, ஜூலை 31— தீவிர கிராமப்புற வளர்ச்சித் திட்டத்தின் கீழ் தஞ்சை மாவட்டத்தில் நடப்பு நிதியாண்டில் முதல் 3 மாத காலத்தில் 54 லட்சத்து 51 ஆயிரம் ரூபாய் செலவிடப்பட்டுள்ளதாக திட்ட அதிகாரி எஸ். சோமசுந்தரம் தெரிவித்துள்ளார்.

175 கைவினைஞர்கள் உட்பட ஆயிரத்து 300 பேர்கள் இத்திட்டத்தால் பயனடைந்ததாக அவர் மேலும் கூறினார்.

மேற்கண்ட தொகையில் 39.72 லட்ச ரூபாய் வங்கிகளால் கடனாக வழங்கப்பட்டுள்ளதாகவும் சோமசுந்தரம் மேலும் கூறினார்.

---

கத்திமுனையில் பெண்கடத்தல்:

## தேசிய பாதுகாப்பு சட்டத்தின் கீழ் வாலிபன் கைது

சென்னை, ஜூலை 31—போலீஸ்காரர்களை கத்தியால் குத்திய பிரபல கேடி மணி என்கிற குர்பானி (வயது 25) தேசிய பாதுகாப்பு சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டுள்ளான்.

சென்னை சேத்துப்பட்டைச் சேர்ந்தவன் குர்பானி.(வயது 25)இவன் சம்பவத்தன்று அமைந்தகரையில் பஸ்சுக்காக காத்திருந்த ஒரு பெண்ணை கத்தியைக்காட்டி மிரட்டி ஆட்டோவில் கடத்திச் சென்றான். ஆனால் அந்தப் பெண் ஓடும் ஆட்டோவிலிருந்து வெளியே குதித்து தப்பி ஓடி விட்டார்.

இது சம்பந்தமாக அந்த பெண் டி. பி. சத்திரம் போலீஸ்நிலையத்தில்புகார் செய்தார். இன்ஸ்பெக்டர் மாரிமுத்து இதுசம்பந்தமாக வழக்கு ஒன்று பதிவு செய்து குர்பானியை தேடி வந்தார்.

சம்பவத்தன்று டி. பி. சத்திரம் போலீஸ் நிலைய தலைமைக் காவலர் முத்துசாமி, காவலர் முகமது உசேன் ஆகியோர் அமைந்தகரையில் பணியாற்றிக் கொண்டிருக்கும் போது குர்பானி அந்த பக்கமாக வந்து கொண்டிருந்தான்.

உடனே அந்த போலீசார் அவனைப்பிடிக்கமுயன்றனர். அப்போது குர்பானி தான் மறைத்து வைத்திருந்த கத்தியால் போலீசாரைக் குத்தினான் இருந்த போதிலும் போலீசார் அவனுடன் ரோடில் கட்டிப்புரண்டு சண்டைப் போட்டு குர்பானியைப்பிடித்தனர்.

கைது செய்யப்பட்ட குர்பானி ஒரு பெண் கடத்தல் வழக்கிலும், ஒரு வீட்டில்பூட்டை உடைத்து திருடிய வழக்கிலும் சம்பந்தப்பட்டவன். மேலும் பல வழக்குகளில் சம்பந்தப்பட்டவன்.

இது குறித்து போலீசார் இவனை தேசிய பாதுகாப்பு சட்டத்தின் கீழ் கைது செய்துள்ளனர் என்று போலீஸ் கமிஷனர் ஸ்ரீ பால் நிருபர்களிடம் தெரிவித்தார்.

---

கடிகாரம் கடத்தியதாக

## நீதிபதி கைது

கல்கத்தா, ஜூலை 31— தாய்லாந்து நாட்டின் தலைநகரான பாங்காக்கிலிருந்து ரூபாய் 10 லட்சம் மதிப்புள்ள கை கடிகாரங்களை கடத்தியதாக வங்க தேசநீதிபதி முகமதுகாசீம் கைது செய்யப்பட்டார்.

கல்கத்தா விமான நிலையத்தில் சுங்க இலாகா அதிகாரிகள் அவரிடம் இருந்த 4 ஆயிரத்து 990 கடிகாரங்களை பறிமுதல் செய்தனர்.

---

புரட்சித்தலைவரை

## பதவி விலக சொல்லும் யோக்யதை கருணாநிதிக்கு ஏது?

அமைச்சர் ஹண்டே கேள்வி

சென்னை, ஜூலை 31 முதல்வர் புரட்சித் தலைவரைப் பதவி விலகச் சொல்லும் யோக்யதை கருணாநிதிக்கு ஏது என்று அமைச்சர் டாக்டர் ஹண்டே கேட்டார்

சேத்துப்பட்டு வைத்திய நாத முதலித் தெருவில் கழக பொதுக் கூட்டம் நடந்தது.

அண்ணாநகர் தொகுதி செயலாளர் வ.கோதண்டராமன் தலைமைவகித்தார்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் அமைச்சர் அண்டே மதுரை மாநகராட்சி கொறடா இளவரசன், புலவர் இந்திர குமாரி, நா. துவாரகநாத், நா. ரா. பாபு, ஏ.வி.வெங்கடேசன், ஜெயச்சந்திரன், காஞ்சிமணி மொழியன், ப. இளங்கோவன் ஆகியோரும் பேசினார்கள்.

அமைச்சர் அண்டே பேசுகையில் கூறியதாவது:—

நான் டெல்லி சென்ற போது இந்திரா காங்கிரஸ் நண்பர்கள்என்னைச் சந்தித்துப பேசினார்கள். கருணாநிதி வந்து சென்றதைப் பற்றி சொன்னார்கள்.

அங்கே சென்ற கருணாநிதி தமிழக ஆட்சியைப் பற்றி இந்திரா காங்கிரஸ் காரர்களிடம் பேச ஆரம்பித்தாராம்.

"நீங்கள் சட்டசபையைக் கலைக்கச் சொல்கிறீர்களா?' என்று கருணாநிதியைப் பார்த்து அவர்கள் கேட்டார்கள்.

அவர்கள் கேட்ட முதல் கேள்வியே இதுதான். உங்கள் கதி என்ன என்று கேட்டிருக்கிறார்கள்.

### அண்ணா நகரில் நிற்பாரா?

சட்டசபையைக் கலைத்தால், அண்ணா நகர் தொகுதியில் கருணாநிதியால் நிற்க முடியுமா? அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலை இருக்கிறது.

எனது தொகுதியில் எண்ணப்பட்ட வாக்குகளை மீண்டும் எண்ணவேண்டும் என்று நான் வழக்குப் போட்டுள்ளேன்.

"வாக்குப் பெட்டிகளை திறக்கக் கூடாது. அது மட்டுமல்ல; இந்த வழக்கையே எடுத்துக் கொள்ளக் கூடாது" என்று அதிசய கேஸ் போட்டுள்ளார்கருணாநிதி.

உயர்நீதி மன்றம், சுப்ரீம் கோர்ட்டுக்குமாக அவர் நடந்து வருகிறார். இவரதுஇந்த நிலை டெல்லியில் உள்ள அத்தனை அமைச்சர்களுக்கும் தெரியும்.

மக்களைச் சந்திக்கும் தைரியம் இவருக்குக்கிடையாது.இவர்போய்புரட்சித்தலைவர் ராஜினாமா செய்ய வேண்டும் என்று கூறுகிறார்,

இதைக் கேட்கும் தகுதி கருணாநிதிக்கு கிடையாது. தொடர்ந்து 15 நாட்கள் தனது தொகுதியில் பம்பரமாக சுற்றி வாக்குகள் கேட்டு, 600 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்ட நிலையில் உள்ள கருணாநிதி, 20 நிமிடங்களே தனது மதுரை மேற்கு தொகுதியில் சுற்று பயணம் செய்து 20ஆயிரத்துக்கும் மேலான வாக்கு வித்தியாசத்தில் ஜெயித்த புரட்சித்தலைவரை ராஜினாமா செய்ய வேண்டும் என்கிறார்.

### தமாஷ் தமாஷ்

இதை விட ஒரு தமாஷ் இருக்கிறதா?

இந்த அரசைக்கலைத்தால் நீங்கள் தயாராக இருக்கிறீர்களா? நீங்கள் மீண்டும் அண்ணா நகரில் ஜெயிக்க முடியுமா? திரும்பவும் இங்கே தான் வந்து நிற்க வேண்டும்.வழக்கு முடியும் வரை நீங்கள் எங்கேயும் போக முடியாது. எந்த தொகுதிக்கும் போக முடியாது.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று டெல்லியில் இருக்கும் இந்திரா காங்கிரஸ்காரர்கள் மீண்டும் மீண்டும் கேட்ட போது. கலைப்பு என்று நான் சொல்லவில்லை நானே எதிர்க்கட்சித் தலைவராக இப்போது உள்ளேன்.கலைத்தால்ஆபத்து.கலைப்பு பற்றி சும்மா சொன்னேன். எம். ஜி. ஆரை மிரட்டுவதற்காக இதைச் சொன்னேன் என்று பின்னர் மாற்றிப் பேசினார்.

நான் அவர்களுக்கு சொல்லிக்கொள்வேன்.

இந்த ஆட்சி மிகத்தெளிவாக 1985ம் ஆண்டு மே மாதம் வரை இருக்கும்.

மீண்டும் நாங்கள் தான் ஆட்சிக்கு வருவோம். முதல்வராக புரட்சித்தலைவர்தான் வருவார்.

(சந்தேகம் இல்லை சந்தேகம் இல்லை என மக்கள் முழக்கம்)

இதில் சந்தேகம் இல்லை. நீங்கள் சொன்ன பதிலை ஏற்றுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் ஹண்டே பேசினார்.

---

உ. பி யில்

## 25 ஆயிரம் பேர் மதம் மாற முடிவு?

கான்பூர், ஜூலை 31— உத்திரப்பிரதேச மாநிலத்தில் ஆகஸ்ட் 15-ந் தேதி தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்த 25 ஆயிரம் பேர் இஸ்லாம் கிறித்துவம், மற்றும் புத்த மதத்திற்கு மாற உள்ளதாக, பாரதீயதளித்பந்தர் கட்சி அமைப்பாளர் ஸ்ரீநாத் போதா தெரிவித்துள்ளார்.

அடக்கு முறை போன்றவைகள்காரணமாகஇவர்கள் மதம் மாற எண்ணியுள்ளதாகவும் அவர் மேலும் தெரிவித்தார்.

---

ஈரானில் பூமி அதிர்ச்சி:

## சாவு எண்ணிக்கை 8 ஆயிரமாக உயர்வு

டெகரான், ஜூலை 31. ஈரானின் தென்கிழக்குப் பகுதியில் ஏற்பட்ட பூமி அதிர்ச்சியில் இதுவரை 8 ஆயிரம்பேர் இறந்தனர். 7 கிராமங்கள் அடியோடு தரைமட்டமாகி விட்டன.

இடிபாடுகளுக்கிடையே சிக்கிய பிணங்களை அப்புறப்படுத்தும்பணிகள் நடந்து வருகின்றன. இதுவரை 800 பிணங்கள் அப்புறப் படுத்தப்பட்டுள்ளன.

கடந்த செவ்வாய் அன்று நடந்த இந்த பூமி அதிர்ச்சியில் 60 ஆயிரம் பேர் காயமடைந்தனர்.

# அண்ணா



வறட்சிப் பணிகளுக்கு

## ரூ30கோடி செலவு: தினமும் 4 லட்சம் பேருக்கு வேலை

### அமைச்சர் எஸ். டி. எஸ். தகவல்

சென்னை, ஜூலை 31— தமிழகத்தில் வறட்சி பணிகளுக்காக இதுவரை 30 கோடி ரூபாய் செலவிடப்பட்டது. தினமும் 4 லட்சம் பேருக்கு வேலை வாய்ப்பளிக்கப்படுகிறது என்று அமைச்சர் எஸ் டி. எஸ். தெரிவித்தார்,

தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ் நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது.

தமிழ்நாட்டில் வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் துயர் துடைப்பு பணிகளுக்காக இதுவரை சுமார் 30 கோடி ரூபாய் செலவிடப்பட்டுள்ளது.

குடிநீர் வழங்கும் பணிகளுக்காகவும் வேலைவாய்ப்புத்திட்டத்துக்காகவும் இந்த தொகை செலவிடப்பட்டுள்ளது.

துயர் துடைப்புப்பணிகள் நடைபெற்றுவரும் எல்லா மாவட்டங்களிலும் சேர்த்து நாளொன்றுக்கு சுமார் 4 லட்சம் பேருக்கு வேலை அளிக்கப்பட்டுள்ளது.

### குடிநீர் வசதி

குடிநீர் வழங்குவது வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள பகுதிகளில் விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கச் செய்வது ஆகிய இரண்டு பணிகளை முக்கிய நோக்கமாக கொண்டு திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுவருகின்றன.

அத்துடன் பாசன நீர் வளங்களை செப்பனிடுவது, புதிய சாலைகளை அமைப்பது, ஏரி, குளம் கண்மாய் சீரமைப்பு செய்வது ஆகிய பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

வறட்சியால் பாதிக்கப்பட்ட தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களில் துயர் துடைப்புப் பணிகளுக்காக அதிக பட்சம் 48 கோடியே 58 லட்ச ரூபாய் மதிப்புக் கடன் திட்டங்களுக்கு ஒப்புதல் வழங்கப்பட்டுள்ளது.

சமீபத்தில் பெய்த மழை புஞ்சைப் பயிர்களுக்கு மட்டுமே ஓரளவு சாதகமாக உள்ளது. ஏற்கனவே திட்டமிட்டபடி செப்டம்பர் மாதம் 30-தேதி வரையில் துயர் துடைப்புப்பணிகள் நிறைவேற்ற வேண்டுமா என்பது வடகிழக்குப் பருவமழை பெய்வதைப் பொறுத்து நிர்ணயிக்கப்படும்.

காடு வளர்ப்புத்திட்டங்களுக்காக 90 லட்ச ரூபாயும், மண் வளப் பாதுகாப்புக்காக 45 லட்சரூபாயும் செலவிட ஒப்புதல் வழங்கப்பட்டுள்ளது. பாசன கிணறுகளை ஆழப்படுத்துவதற்காக விவசாயிகளுக்கு 5 கோடி ரூபாய் தக்காவி கடன் வழங்குவதற்கு அரசு ஒப்புதல் வழங்கியுள்ளது.

### மலிவு விலை வைக்கோல்

கால்நடை தீவனங்கள் தட்டுப்பாட்டைப் போக்குவதற்கு மலிவுவிலையில் வைக்கோல் போன்ற கால்நடை தீவனங்கள் விற்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. கால்நடைகளுக்கு தடுப்பு ஊசிகள் போடவும் தேவையான தொகை ஒதுக்கப்பட்டுள்ளது.

குழந்தைகள் கருவுற்ற தாய்மார்கள் மற்றும் தாய்பால் ஊட்டும் தாய்மார்கள் ஆகியோர்களுக்கு சமூக நலத்துறையின் மூலம் மாநிலம் பூராவிலும் 3 ஆயிரம் மையம் திறக்க அனுமதிக்கப்பட்டுள்ளது.

இவற்றில் 2 ஆயிரத்து 67 மையங்கள் திறக்கப்பட்டு செயல்பட்டு வருகின்றன. மீதமுள்ளவை விரைவில் திறக்கப்படும்.

வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் உள்ள மக்களுக்கு தடுப்பு ஊசி போடுவது, மருத்துவ வசதிகள் ஆகியவற்றிற்காக ஒன்றரைக் கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

எண்ணை வித்துக்கள், விதை, நெல் போன்றவற்றை மலிவு விலையில் வினியோகிக்க ஒரு கோடியே40லட்சரூபாயை அரசு ஒதுக்கியுள்ளது.

சென்னை மயிலாப்பூர் தாசில்தார் அலுவலகம் கட்டுவதற்காக 22 கிரவுண்டு நிலம் கையகப்படுத்த அரசு ஒப்புதல் வழங்கி இதற்காக 7 லட்ச ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

இதே போல பெரம்பூர் புரசைவாக்கத்தில் தாசில்தார் அலுவலகம் 5 லட்சத்து 31 ஆயிரம் ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்படும்.

ஊத்துக்கோட்டை, பள்ளிப்பட்டு, வலங்கைமான், குடவாசல், கந்தர்வ கோட்டை, மானமதுரை இளையான்குடி, ராதாபுரம், காங்கேயம் ஆகிய 9 துணை தாலுக்காக்களை தாலுக்காக்களாக உயர்த்த உத்தரவிடப்பட்டுள்ளது.

கிராமப் பணியாளர்கள் சைக்கிள் வாங்க 600 ரூபாய் கடன் வழங்க அரசு ஒப்புதல் அளித்திருக்கிறது. இந்த தொகை 40 மாத தவணைகளில் பிடித்துக்கொள்ளப்படும்.

செங்கற்பட்டு மாவட்டம் மறைமலை நகர் அருகில் கடற்படை பயிற்சி கேந்திரம் அமைக்க 940 ஏக்கர் நிலத்தை மத்திய அரசுக்கு ஒப்படைக்க தமிழக அரசு ஒப்புக் கொண்டுள்ளது. தமிழ்நாட்டில் இந்த கேந்திரம் அமைப்பது பற்றி எந்தவித பதிலும் இது வரை மத்திய அரசிடமிருந்து வரவில்லை.

தமிழ்நாட்டில் கடற்கரை ஓரமுள்ள பல்வேறு மாவட்டங்களில் 82 புயல் பாதுகாப்பு இல்லங்கள் கட்டுவதற்கு ஏற்கனவே ஒப்புதல் வழங்கப்பட்டுள்ளது.

இவற்றில் 50 இல்லங்களை ஐரோப்பிய நிதிஉதவி அமைப்பும், 25 இல்லங்களை இந்திய செஞ்சிலுவை சங்கமும், 5 இல்லங்களை மராட்டிய மாநில புயல் நிவாரண மக்கள் குழுவும் மீதி 2 இல்லத்தை யூனிசெப் நிறுவனமும், கட்டித்தருகிறது.

இது தவிர மேலும் இருபது புயல் பாதுகாப்பு இல்லங்களை கட்ட 60லட்ச ரூபாயை மான்யமாக அளிக்க ஐரோப்பிய நிதி உதவி அமைப்பு முன்வந்துள்ளது. இவைகளைக்கட்டி முடிக்க 78 லட்ச ரூபாய் செலவாகும். மீதி 18 லட்ச ரூபாயை தமிழக அரசு செலவிடும்.

### சொன்னதை மீறி

சாராயத்தை பாட்டிலில் அடைத்து தான் விற்பனைக்கு கொடுக்க வேண்டும் என்றுசாராயக்கலவை ஆலைகளுக்கு அரசு உத்தரவிட்டுள்ளது. பல்வேறு இடங்களில் உள்ள ஆலைகள் பாட்டிலில் தான் அடைத்து கொடுத்து வருகிறது.

ஆனால் சென்னை நீலாங்கரையில் உள்ள ஆலை பாட்டிலில்அடைத்து விற்பனைக்கு தருவதற்கான எந்த முயற்சியையும் மேற்கொள்ள முடியவில்லை. இதன் காரணமாக சென்னை நகர சில்லறை கடைகளுக்கு பாட்டில் சாராயம் வழங்க முடியாத நிலைமை இருந்து வருகிறது. இதற்கு காரணமாக இருந்த நீலாங்கரை பிளண்டிங் யூனிட் லைசென்ஸ் ரத்து செய்யப்பட்டுள்ளது.

இம்மாதம் 25-ந் தேதிக்குப் பிறகு பாட்டில் சாராயம் சரிவர சப்ளை செய்யாமலிருக்கும் மற்ற பிளண்டிங் யூனிட் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

---

### கண்ணதாசன் குணமடைய ஷெரீப் ரெக்ஸ் பிரார்த்தனை

சென்னை, ஜூலை 31— அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வரும் கவியரசு கண்ணதாசன் குணமடைய அனைவரும் பிரார்த்தனை செய்யும்படி ஷெரீப் டாக்டர் ரெக்ஸ் அனைவருக்கும் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

இது பற்றி அவர் கூறியதாவது:-

தமிழகம் பெருமிதம் அடையும் பாங்கில் இந்த தலைமுறையின் இணையற்ற கவியரசாகதிகழும் தமிழக அரசவைக் கவிஞர் கண்ணதாசன் தேமதுரத் தமிழோசையை உலகமெல்லாம் பரப்பும் பணியில் ஈடுபட்ட நேரத்தில் உடல் நலம், உணர்வு இழந்த நிலையில் இருப்பது கண்டு தமிழ்கூறும் நல்லுலகமே அதிர்ச்சி அடைந்துள்ளது,

தமிழ் அன்னையின் செல்லப் பிள்ளையாக தமிழ் சமுதாயத்தினர் எல்லோருக்குமே நல்லவராகத் திகழும் கண்ணதாசன் மிகமிக விரைவில் உடல் நலம் பெற்று தாயகம் திரும்ப வேண்டுமென தமிழன் ஒவ்வொருவனுமே ஆதங்கத்தோடு ஏங்கிக் கிடக்கிறான்.

தமிழகத்தில் உள்ள இந்து சமய ஆலயங்கள், கிறிஸ்துவ கோவில்கள், இஸ்லாமிய மசூதிகள் அனைத்திலும் கவியரசு நலம்பெற உடனடியாக பிரார்த்தனைகள் நடத்துமாறு பணிவன்போடு வேண்டுகிறேன்.

இவ்வாறு ரெக்ஸ் அறிக்கையில் கூறியுள்ளார்.

---

அரசு அங்கீகாரம் பெற்ற

## தனியார் மருத்துவ மனைகளில் கருத்தடை ஆபரேஷன்

### அமைச்சர் அண்டே தகவல்

சென்னை, ஜூலை 31— அரசு அங்கீகாரம் பெற்ற 204 தனியார் மருத்துவமனைகளில் குடும்பக்கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்யப்படுகிறது. இங்கு அறுவை சிகிச்சை செய்து கொள்பவருக்கு அரசின் அனைத்து சலுகைகளும் கிடைக்கும் என்று அமைச்சர் அண்டே கூறினார்.

தமிழக குடும்பக்கட்டுப்பாடு ஆலோசனை வாரியத்தின் கூட்டம் தலைமைச் செயலகத்தில் அமைச்சர் டாக்டர் அண்டே தலைமையில் நடைபெற்றது. குழு உறுப்பினர்களான சட்டமன்ற உறுப்பினர்கள் திருப்பூர் மணிமாறன், விசுவநாதன், சமரசம், இந்திய மருத்துவ சங்கத்தைச் சேர்ந்த சந்திரபோஸ், மற்றும் அதிகாரிகள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

கடந்த ஆண்டில் குடும்ப கட்டுப்பாடு செயல்படுத்தப்பட்டவிதம் குறித்து ஆய்வு செய்யப்பட்டது.

பின்னர் நிருபர்களுக்கு அமைச்சர் அண்டே பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:—

கடந்த ஆண்டில் ஒரு லட்சத்து 82 ஆயிரத்து 200 பேருக்கு குடும்பக்கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்ய திட்டமிடப்பட்டது. இதில் ஒரு லட்சத்து 31 ஆயிரத்து 224 பேருக்கு அறுவை சிகிச்சை செய்யப்பட்டது.

இந்த ஆண்டு 2 லட்சம் பேருக்கு அறுவை சிகிச்சை செய்ய திட்டமிடப்பட்டுள்ளது.

கடந்த ஆண்டு சென்னை நகரில் மட்டும் 20 ஆயிரத்து 100 பேருக்கு அறுவை சிகிச்சை செய்ய திட்டமிடப்பட்டதில் 19 ஆயிரத்து 352 பேருக்கு குடும்பக்கட்டுப்பாடு செய்யப்பட்டது.

தருமபுரி மாவட்டத்தில் திட்டமிடப்பட்டதை விட அதிகமாகவே, 106 சதவிகிதம் பேருக்கு அறுவை சிகிச்சை செய்யப்பட்டது.

ராமநாதபுரம் மாவட்டத்தில் 56 சதவிகிதம் பேருக்கு அறுவைசிகிச்சை செய்யப்பட்டது.

மற்ற எல்லா மாவட்டங்களும் திட்டமிடப்பட்டதற்கு சமமாக 100 சதவிகிதம் அறுவை சிகிச்சை செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

"குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்து கொண்டால் குழந்தைகள் எண்ணிக்கையைக் குறைக்கலாம். நல்ல ஆரோக்கியத்தோடு குழந்தையும் தாயும் வாழலாம்" என்று விளம்பரம் செய்வதோடு குழந்தைக்கும் தாய்க்கும் நல்ல மருத்துவ வசதி, சத்துணவு வசதிகளும் செய்யப்போகிறோம் என்று விளம்பரப்படுத்துவதற்காக தமிழக அரசு சினிமா செய்திப்படம் ஒவ்வொன்றிலும் இந்த குழந்தை நல சேவைகள் கிடைக்கும் விதம் பற்றி பிரச்சாரம் செய்யப் போகிறோம்.

### சலுகை உண்டு

தமிழ்நாட்டில் அரசாங்க மருத்துவமனைகளில் குடும்பக்கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்து கொண்டால் தான் பண சலுகை மற்றும் உள்ள சலுகைகள் கொடுக்கப்பட்டு வந்தன.

இத்துடன் 204 தனியார் மருத்துவ நிலையங்களுக்கு ஒப்புதல் கொடுக்கப்பட்டு அவைகளில் அறுவை சிகிச்சை செய்பவர்களுக்கும் இதே சலுகை கொடுக்கப்படும் என்று இன்றைய கூட்டத்தில் முடிவு எடுக்கப்பட்டது.

அதே போல தனியார் டாக்டர்களிடம் அறுவை சிகிச்சை செய்து கொண்டு மாவட்ட மருத்துவ அதிகாரிகளிடம் சான்றிதழ் பெற்றுத்தந்தால் இந்த சலுகைகளை கொடுக்க அரசு முன் வந்துள்ளது.

முதல்வர் புரட்சித்தலைவரின் உத்திரவு படி இந்த குடும்பக்கட்டுப்பாடு நன்மை பற்றிய பிரச்சாரம் தீவிரப்படுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

இதற்காக தொழிற்சங்கத் தலைவர்களுடைய ஒத்துழைப்பு பெறப்பட்டு வருகிறது.

சட்டமன்ற, நாடாளு

(3-ம் பத்தி பார்க்க)

---

(6-ம் பத்தி தொடர்ச்சி)

மன்ற உறுப்பினர் சங்க ஒத்துழைப்பும் இதற்காக பெறப்படுகிறது.

தமிழ்நாட்டில் கடந்த 10 ஆண்டுகளில் மக்கள் தொகை அதிகரிப்பு 17.23 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. ஆனால் சில மாவட்டங்களில் இந்த உயர்வு மிக குறைந்திருக்கிறது. நெல்லை மாவட்டத்தில் 11.25 சதவிகிதம் தான். நீலகிரி மாவட்டத்தில் மட்டும் 27 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது.

அங்கு அறுவை சிகிச்சை 87 சதவிகிதம் நடந்திருந்த போதிலும் இவ்வளவு அதிகமாக மக்கள் பெருக்க வேகம் நீலகிரி மாவட்டத்தில் இருக்க என்ன காரணம் என்று ஆராயப்பட்டு வருகிறது. அதற்கு முந்திய 10 ஆண்டுகளைவிட கடந்த 10 ஆண்டில் மேலும் 6 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் அண்டே கூறினார்.

---

ஆந்திர முன்னாள் முதல்வர் சென்னா ரெட்டி

## பணம் வசூலித்தாரா? விசாரணை நடக்கும்: அஞ்சய்யா அறிவிப்பு

ஐதராபாத், ஜூலை 31—ஆந்திர மாநில முன்னாள் முதல்அமைச்சர் சென்னா ரெட்டி தனது ஆட்சியின்போது பணம் வசூல் செய்தார் என்ற புகார் பற்றி ஆந்திர அரசு விரைவில் விசாரணை நடத்த இருக்கிறது என்று முதல்அமைச்சர் அஞ்சய்யா அறிவித்தார்.

அண்மையில் ஆந்திர மாநில அமைச்சர் பாஸ்கர ராவ் தனது பதவியை ராஜினாமா செய்தார். இப்படி அவர் ராஜினாமா செய்தது ஆந்திர முதல் அமைச்சர் அஞ்சய்யாவுக்கும் பாஸ்கரராவுக்கும் இடையே லடாய் ஏற்பட்டதே காரணம் என்று கூறப்பட்டது.

முதல் அமைச்சர் அஞ்சய்யாவின் வற்புறுத்தல் காரணமாகவே பாஸ்கரராவ் தனது மந்திரி பதவியை ராஜினாமா செய்தார் என்றும் சொல்லப்பட்டது.

இந்த ராஜினாமா சம்பந்தமாக ஐதராபாத்தில் இருந்து வெளிவரும் தெலுங்கு நாளேடு ஒன்று முதல்அமைச்சர் அஞ்சய்யா பாஸ்காராவிடம் இருந்து பணம் வாங்கினார் என்ற செய்தியை வெளியிட்டது. முன்னாள் முதல் அமைச்சர் டாக்டர் சென்னா ரெட்டியை பதவியில் இருந்து நீங்குவதற்கும் பணம் செலவு செய்யப்பட்டது என்றும் அந்தப் பத்திரிகை செய்தியை வெளியிட்டிருந்தது.

இது குறித்து முதல் அமைச்சர் அஞ்சய்யா நிருபர்களிடம் கூறியதாவது:

பணம் வாங்கும் நிலைமை எனக்கு ஏற்படவில்லை: தவிர மற்றவர்களுக்கு பணம் கொடுக்கும் நிலைமையிலும் நான் இல்லை. என்னை யாராலும் பணம் கொடுத்து விலைக்கு வாங்கிவிட முடியாது.

முன்னாள் முதல் அமைச்சர் டாக்டர் சென்னா ரெட்டி தனது ஆட்சியின் போது பணம் வசூலித்தார் என்ற புகார் இருந்து வருகிறது. இது பற்றி அரசு விரைவில் விசாரணை நடத்தும் பணம் எந்த முறையில் வசூலிக்கப்பட்டது என்றும், யார் யாரெல்லாம் பணம் கொடுத்தார்கள் என்ற விபரங்களையும் விரைவில் நாம் தெரிந்து கொள்வது அவசியமானது தான்.

நான் முதல் அமைச்சராக பதவி வகிப்பது பணப்பலத்தால் அல்ல. இந்திராகாந்தியின் நம்பிக்கைக்கு நான் உகந்தவனாக இருப்பதால் தான் முதல் அமைச்சராக பணியாற்றுகிறேன்.

இவ்வாறு முதல் அமைச்சர் அஞ்சய்யா கூறினார்.

---







Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029

Editor:
E. PARASURAMAN